மூர்த்தின் (ப.பெ)-2. ஸௌனக, 3. புளியடி, 5. மது.

மூலா-2. ச்யவ, 3. தொ3ரஹல்லான் (ப.பெ.) 3. தொ3ய்+தலே, ஹல்லான்-ஆட்டிக் கொண்டிருப்பவன் தொ3வ்ர (கிழட்டு) + கொலெலொ திருபு4 5. மது.

## மெ

மெத்3த3ஞன்–2. பிப்பல,

மெட்டதொக்கான்-5. திண்.

## மை

மைசூர்-2. ஸமந்தி3ர, (ஸாமந்த3) 4. மைசூர்-ஊர்த்தொடர்பு காரணமாக, 5. கும், தஞ்.

## மொ

மொண்டிஹனுன் (ப.பெ.)-5. வீர.

மொலவுன்–2. அக3ஸ், 5. மது.

மொலுகுவான்-2. ஸௌனக, 4. மொல்கவான்-அசல் பெயர் 5. செ. பே, பெங், திண், பெரி, அய்.

மொல்லின்-5. பெரி.

மொன்னென்-2. வ்யாஸ.

## யோ

யோகி3-2. காஸ்ய.

## ர

ரங்கா3ன்-2. விஸ்வா, 5. திருப்பதி.

ரமணு-2. மத3ங், 3. ரவணுன், 4. ரமணன்-மூதாதையர் பெயர், 5. மது.

ரவந்து³-2. உத3ங்.

## ரா

ராணி-2. ஸௌனக, 3. க4ண்ணுன், முத்3தி3கி3ரின், பெத்3தி3ன், ஹுர்ருன், அட்டென்,
4. க4ணெ-செக்கு, பெத்3தி3-பெரியவள், முத்3தி3கி3ரி-சுருள்முடி, ஹுர்ரு-கோபத்தின் அறிகுறியான சத்தம், அட்டெ-அட்டைபோல் ஒட்டிகொள்ளுதல்
5. மது, கும், பர.

ராஜுலா-5. கும்.

ராமகோ³விந்த3ம்-2. ஸாலி.

ராமச்சந்தி³ரியா-2 பா4ரத்3, 3. ரம்செந்தி3யான்,
4. ராமச்சந்திரையா-மூதாதையர் பெயர், 5. மது, பெரி
6. புரோகிதப்பிரிவு உண்டு. பத்திரலிகிதத்தில் சிறந்தவர்கள்.

ராமப்பா-2. ஸாலிக, 5. அய்.

ராமாஞ்ஜி-2. வாகரிஷி, 5. அம்மை, தஞ்.
பா4ர்க3 (தஞ்) 3. ராம்டா³, ஜெ:டின்

ராமான்-5. வீர.

ராமாயி-2. காஸ்ய, 3. ரமயின், 5. தஞ்சை.

ராமியா-2. ஸௌனக, 3. கெ3ணுதுன் (கெ3ணுத்-புதையல்)
பொத்திகிஷ்டான் (பொத்தி-நூல் சுற்றும் கருவி, கிஷ்டொ-கிருஷ்ணன்)
ஜோளி, ஜொ:ள்ளின் (ஜொ:ள்ளொ-கம்பு)
பம்பா3யி ரா-பம்பாயில் ஜவுளி வியாபாரம் செய்ததால்
மௌடா3-ரா-பந்தல் போடும் தொழில் செய்ததால் / பெரிய பந்தல் போட்டதால், லக்ஷ்மி-மூதாதையர்பெயர்
5. மது, நில, 6. 'மஹா ஆந்திர காவ்யப்ரவசன'
R. R. சுப்பைய பாகவநர் (மதுரை)

ராமுன்-2. த3தீ4ச, 5. திருவ.

ராம்டார3-2. பார்4க & ச்யவ, 5. தஞ்.

ராம்பை3ன்–5. வீர

ராயபாஊயம்–2. ஜாபாலி, 3. ரப்ளேன், 5. திரு.

ராயா–2. ஜென்மரிஷி, 3. ரவான், 5. கும், வாலா,
6. ஆற்காடு நவாபின் மந்திரி ராயாஜி (வாலாஜாப்பேட்டை)

ராயுலு-2. ஸெளனக.

ராவட்டா-5. அய்.

## ரு

ருப்பல்-2. ஆங்கீ3, 5. கும்.

ருப்பா–2. பராஸ, 3. ருப்பின், (ரூபி-அழகி)
4. ருப்புதல்-அரைத்தல், 5. மது.

## ரெ

ரெகு3பதி-2. ச்யவ, 3. ரேவதி, 5. மது.
ஆங்கீ3, 5. அய்.

ரெகு3ணு-2. ஸெளனக, 3. ரேணுன், 5. திரு.

ரெங்க3ணுன்-2. வாக3ரிஷி, 5. அம்மை.

ரெங்க3ப்பா-5. சேல.

ரெங்கா3-2. மரீசி.

ரெங்கி3யான்-2. கௌண்டி3, 5. கும்.

ரெங்கி3ன்-2. ஸெளனக.

## ரொ

ரொவுந்து3ன்-5. வீர.

## ரே

ரேடி3யோன்-5 வீர.

## ல

லப்பாதி3ன்-2. த3தீ4ச, 3. லொப்பாதி3ன் (மது) 5. மது, பாளே வீர
லப்பாச்சின் (வீர)
லப்பாஸி (பாளே)
6. லப்பாதி நாட்டாண்மை (மது) கனுபாரி வேட்டை
புஷ்பச்சப்பர 4 உபயதார்களில் ஒரு பிரிவினர்

லகு3டு3வா-2. பா4ரத்3, 3. லவ்டா3ன் (மது)
லொட்3டா3ன் (கும்)
4. கோத்திரத்திற்குரிய அசல் வீட்டுப்பெயர்
5. மது, சேல, அம்மா, கும், திரு. நாம, பெரி.

## லி

லிங்கு3-2. ஸௌனக.

## லெ

லெக்ஷ்மி-2. ஸௌனக, 3. ராமியா, 5. பர.

லெஸ்ஸூன்-5. பெரி.

## லொ

லொக3ந்தா3-2. ஸௌனக, 3. பரஸுராமா, 5. மது.
லொ:வந்தா3ன்

லொட்3கி3யா-2. ஸௌமந்

லொட்3டி3யா-2. ஸௌனக, 3. அருமுட்டின், 5. மது.

லொல்லெகுப்புன் (ப.பெ.)-2. ஸௌனக, 3. புளியடி,
4. லொங்லெ-மெலீந்த, 5. மது.
குப்பு-குப்புசாமி-மூதாதையர் பெயர்

## வ

வஜ்ஜிரம்-2. ஜன்ஹு, 4. வஜ்ஜிரம்-வைரம், 5. சேல.

வட³கரை-2. த³தீ4ச.

வந்த³வாஸி-2. மந்த³, 4. வந்தவாஸி-ஊர் தொடர்பான பெயர், 5. தஞ்.

வரத³-2. ஸௌனக. 4. மூதாதையர் பெயர்

வல்லம்-2. கௌண்டி3, 4. வல்லம்-ஊர் தொடர்பானபெயர், 5. தஞ்.

வஸாடு³ன்-2. மௌஞ்ஜா, 3. மாணிக்கா, 5. கும்.

## வா

வாஞல்லு-2. பராஸ, 3. ஜா³ஞல், 5. பர.

வாண்டு³-2. வ்யாஸ.

வாண்ணு-2. வ்யாஸ, 5. சேல, நாம, பர.

வாலா-2. த³தீ4ச, 5. மது, பர.

## வி

விஞ்சுன்-2. கண்வ, 3. விஞ்ஜுன் (சேல) 4. விஞ்சு-கால்மிஞ்சி, தேள், விஞ்சீன் (நாம), விரிஞ்சிபுரம்-ஊர்தொடர்பானபெயர் 5. சேல, திரு, பர, நாம.

விட்டல்-2. மௌத்³க, 5. அம்மை.

விட்டல்வான்-2. அக³ஸ், 4. கோத்ர அசல் வீட்டுப்பெயர்

விடி³-2. ச்யவ, 4. விடி³-ஜன்னல், 5. மது, திண்.

விஸ்வநாதா³-2. காஸ்ய.

## வீ

வீரணஞ-2. காஸ்ய (அம்மை), 5. அம்மை.
மந்த3

வீரஸேகு-2. மார்க்.

வீஷேகு-5. வாலா.

## வெ

வெங்க3ட்டுன்-5. வீர.

வெளுவேஸுன்-2. ஜாபாலி, 3. திருக்கொண்டா, 5. மது.

வென்டி-2. ஸாலி, 5. கும்.

வென்னம்-2. ஜன்ஹு, 5. மது.

## வே

வேலான்-2. ஜன்ஹு, 5. பர.
மார்க்

## வை

வைகு3ண்டம்-2. காஸ்ய.

வைத்3யம்-2. விஸ்வா, பா4ரத்3, 3. வைத்3யான் (ஆத்ரே) திரு,
ஆத்ரே, ஹரித, ஒய்து3ன் - மது, பர.
5. பர, கும், மது.

வைத்3யலிங்க3ம்-2. ஸாலி, 3. வேரிங்கா3ன், 5. திரு.

வைநாது3ன்-3. ஸேனுத்3ரின், 5. கும், 6. வைத்தீஸ்வரன் கோயிலுக்கும் இப்பிரிவினருக்கும் தொடர்பு உள்ளது.

## ஸ்ரீ

ஸ்ரீரங்க3தா4முன்-2. மத3ங், 3. ஸிந்தா3வுன், 5. கும்.

ஸ்ரீரங்கம்-2. ஸௌனக.

## ஸ

ஸங்கீ³தம்-2. ச்யவ, 5. தஞ்.

ஸங்கு³-2. மார்க், 5. மது.
ஸரப4

ஸடா³ன்-5. வீர.

ஸம்பங்கி³–2. ஆத்ரே (தஞ்), 3. ஸம்பேங்கி3, 5. தஞ், கும்.
பா4ர்க3 (கும்)
ஸரப4

ஸரங்கு³-2. மௌஞ், பராஸ, 3. க3தி4ன்-திண், 5. மது, திண், பெரி

ஸரவணு-5. காஞ்சி.

ஸர்வா-2. மந்த3, 3. ஸெர்ரான்-திரு, 5. மது, பர, திரு.

ஸ்ரவணு–2 உத3ங்.

## ஸா

ஸாது³ன்-5 வீர.

ஸாமின்-2 த3தீ4ச, 3. ஸாமிகட்டியம்-தஞ், 5. திரு, தஞ், ராசி
திருவ, உறை.

ஸாஹின்–2. உபம, 3. அன்னன், 5. ராசி.

## ஸி

ஸிகா³ன்–2 விஸ்வா, 5. திருப்பதி.

ஸிங்கா³ன்-2. ஸ்ரீவத்ஸ, 5. நாம, சேல, காஞ்.

ஸிங்கு³ன்-2. மௌத்3, 5. அய், கும், நாகர்.

ஸித்³தா³ன்-2. ஸௌனக, வ்யாஸ, கௌண்டி3, 5. வீர, மது.

ஸீவந்தி³–2. மந்த3, 5. பர.

ஸிவலிங்கா³–2 மந்த³, 5. திருபு4.

ஸிவா-2. தூ³ர்வா.

## ஸீ

ஸீதாராம்–2. பகீரிஷி (அய்), 5. அய், திரு, கும்.
கௌண்டி³ (திரு, கும்)

ஸீராட்டு 5. தஞ்.

## ஸு

ஸுகு3டு3ன்-2. அக3ஸ், 5. மது.

ஸுந்த³ரம்-2. மார்க், 3. லிங்க3ப்–தஞ், 5. தஞ்.

ஸுப்3பி3யா–2. தூ3ர்வா (தஞ்), 4. ஸுப்3பை3யா-மூதாதையர் பெயர்
பிப்பல
5. தஞ்.

ஸுப்3பா3ன்-4. ஸுப்3பொ3 (ஸௌ) - தேமல், 5. வீர

ஸுர்க்3யாடு3ன்-4. ஸுர்க்3யாட்3-இழிவு, சலிப்பு காரணமாக வழங்கப்படும் சொல், 5. மது.

## ஸூ

ஸூரி–2. ஸௌனக.

ஸூர்யான்-2. உபம, 5. மது.

## ஸெ

ஸெங்கு³–2. வ்யாஸ.

ஸெஞ்ஜெவுன்-2. மௌஞ்ஜா, 3. மாணிக்கா, ஸெஞ்ஜிவ் (ஸௌ) குளவி, 5. பர, மது.

ஸெடி3திப்பான்–2. கௌண்டி³, 5. மது.

ஸெட்டின்-2. ஜமத³, 5. மது, தஞ்.

ஸெருவா–2. ஸௌனக, 3. ஸௌராண்.

ஸெலமய்யான்-5. ஆர.

ஸெனிக்கா-2. ச்யவ, 3. ஸென்கா³ன், 5. திரு.

ஸென்னிவீரா-2. காஸ்ய, 5. பர.

# ஸே

ஸேது³பதி-2. மௌஞ், 3. ஸேத்பதின், 5. பர.

ஸேஸா³ன்-2. ஜாபா³லி, 5. நாம.

ஸேஷா-2 கண்வ, 5. திரு, 6. மதுரை ஸௌராஷ்ட்ர மேல்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் திரு. S. K. குப்புசாமி (ஜனாதிபதி விருது பெற்ற நல்லாசிரியர்)

ஸேனுதி³-2. ஸாலி, 3. கொ²லான், 4. கொ²லொ (ஸௌ) - நரி 5. பர, எமனே.

# ஸொ

ஸொட்டலலு-2. ஜமத³. 4 ஸொட்டொ(ஸௌ)-சொட்டை, 5 மது ஸாலி

ஸொரண்ட்டி-3. ஸொண்ட்யான், 4 ஸொண்டி(லௌ)-சுக்கு, தும்பிக்கை 5. மது. 6. ஆந்திரர்களிடையேயும் உள்ளது. உ-ம். ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் குருவின் பெயர் சொண்டி வேங்கடரமணய்யா.

ஸொத³கு³ன்-2. ஸௌனக, 4 ஸொதக்கு(ஸௌ)-சோறு நொந்து போதல் (கெட்டுப் போதல்), 5. மது.

ஸொனிக்கா–2. ஸௌனக, 5. மது, நாம.

ஸொன்னராக³முன்-2. ஜஹ்னு, 3. குடுவான், 5. மது.

ஸொன்னு-2. ச்யவ, 5. கும், பர, மது.

ஸொன்னியா-2. பா4ரத்³ (கும்).
மரீசி (பர, மது)

ஸொலுகுவான்–2 மார்க், 3. அந்தியா-திரு, 5. அய், திரு.

## ஸோ

ஸோமங்கி³ளி-2, பா4ரத்³, 3. ஸோங்கி³ளின், 5. பர.

ஸோமஞ்ஜேடு³ன்-2. மௌஞ்ஜா, 3. மாணிக்கா,
4. ஸோமஞ்ஜோடு-அங்கவஸ்திரமும் உடையும்,
5. கும்.

ஸோமி–2 மார்க், 3. ஸொமின், 4. ஸோமி (தெ) - வன்னிமரம்,
5. பர, மது.

ஸோலே-2. ஸௌனக, 3. ஸோலென், 5. மது, பெரி.

## ஹ

ஹண்டா³ன்–2. ஸௌனக, 3. மட்டமன்ஞ, 5. பர.

ஹண்டி³-2. த³தீ4ச, அண்டி³, 5. தஞ், காஞ.

ஹத்³து³கென்னின்-2. ஜாபா³லி, 3. திருக்கொண்டா,
4. ஹத்³து³(ஸௌ)-அரை, கென்னி-குருணை

ஹரிச்செந்து³ருன்–2. கண்வ, 4. ஹரிச்சந்திரன்-மூதாதையர்
பெயர், வஞ்சப்புகழ்ச்சிப் பெயர்.

ஹரியா-2, விஸ்வா, 3. அரியா, 4. ஹரி+ஐயா, 5. அய், கும்,
வாலா, பெங்.

ஹரின்-2 உபம, 4. ஹரின் (ஸௌ)-மான்.

ஹல்லுன்-2. உத³ங், 3. அல்லு, 4. ஹள்ளு (ஸௌ) -மெதுவாக,
5. மது

## ஹி

ஹிக்கின்-5. மது, 6. மதுரையில் சாரட்டு வண்டிகளை வாடகைக்கு
விட்டுப் பிரபலமடைந்தவர்கள்.

## ஹா

ஹாதி$^{3}$ன்-2. ஹாதி$^{3}$(ஸௌ)-கறையான், 5. வீர.

ஹாந்தி$^{3}$ர்னு-3. அம்பலம், 4. ஹாந்தி$^{3}$ர்(ஸௌ)-எலி, 5. பர, மது,
6. மதுரையில் பட்டாசு, வாணவெடி உற்பத்தியாளர்கள்

ஹார்ருன்-2. ஸௌனக, 3. பார்க்க:ராணி, 5. பர, மது.

## ஹோ

ஹோரண்ணு-2. த$^{3}$தீ$^{4}$ச, 3. பார்க்க:நாட்டாமை, 5. மது, பெரி,

ஹோவ்ளான்–2. உபம, 3. ஒபுளா (OBLA)



# கோத்திரப் பிரவரங்கள்

உலகம் முழுவதிலுமுள்ள மக்கள் தங்களுடைய மூதாதையர் களை வணங்கும் மரபினைக் கொண்டுள்ளனர். தாயைத் தலைமை யாகக் கொண்டு இயங்கி வந்த சமுதாய முறை மாறி (நிலையாக உழவுத் தொழிலை மேற்கொண்ட பிறகு) தந்தையை தலைவராகக் கொண்ட சமுதாய அமைப்பு தோன்றியது. ஒவ்வொரு குடும்பமும் பல சகோதரக் குடும்பக் குழுவாகப் பிரிந்தது. ஒரு கூட்டத்தினர் தமது குல முதல்வருடைய பரம்பரையினர் என்று கூறிக்கொண்-டனர். இதைக் 'கோத்ரம்' என்று அழைத்தனர். நமது பரத கண்டத்தில் வர்ணாஸ்ரம தர்ம முறைப்படி, ஆன்மீகத்தில் நாட்டம் கொண்டு சமுதாய நலனுக்குப் பாடுபட்ட அந்தணர்கள் ரிஷிகளைத் தமது குல முதல்வர்களாகக் கொண்டனர். 'ஸத்யகாம ஜாபாலா' கதையினின்று தாயின் பெயரையும் கோத்திரமாகக் கொண்டதாக அறிய முடிகிறது. பிறப்பினால் வேறு வருணத்தவராக இருந்தாலும் தமது ஒழுக்க மேம்பாட்டாலும், கடுமையான தபோபலத்தாலும் 'பிரும்ம ரிஷிகளாக' ஏற்றுக்கொள்ளப்பட்டு வரும் மரபும் இருந்தது. (பிற்காலத்தில் பிற மதத்தவர்களின் படையெடுப்புக்களின் போது இம்முறை மாற்றப்பட்டதாக ஊகிக்கலாம்)

வைதீகசடங்குகளின் போது க்ஷத்திரியர்களும், வைசியர்களும் தமது ஆசார்யர், புரோகிதர்களுடைய கோத்திரப் பிரவரங்களைக் கூறிக் கொண்டனர்.

கோத்திர ரிஷிகளுக்குப் பதிலாக மற்ற குலத்தவர்கள் தமது கூட்டத்தினர்களுக்கு அடையாளமாக மரம், செடி, கொடி, பறவை விலங்குகள், பிற பொருட்கள் ஆகியவைகளின் பெயர்களை வழங்-கினர். அப்பெயர்களுக்குப் புனிதம் கற்பித்தனர்.

எடுத்துக்காட்டாக, தமிழகக் கொங்கு வேளாளர்களிடையே குலப்பெயர்கள், குறிப்பெயர்கள், அடையாளப்பெயர்கள் (Totem Symbols) காணப்படுகின்றன. ஆந்தைக் குலம்: ஆந்தை அடை

யாளப் பறவையாகக் கொண்ட பிரிவினர். இப்பிரிவினர் அனைவரும் சகோதர உறவு கொண்டுள்ளனர். வேறு பிரிவில் தான் திருமண சம்பந்தம் செய்து கொள்ளவேண்டும். இது போன்று காடைக்குலம் (காடைப்பறவையைச் சாப்பிட மாட்டார்கள்), வெண்டுவன் குலம் (வெண்டைக்காயை இவர்கள் உண்ணமாட்டார்கள்), பண்ணைக் குலம் (பண்ணைக்கீரையை உண்ணமாட்டார்கள்)

நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் கோவில்களின் பெயர்களைத் தமது கூட்டங்களுக்கு இட்டு வழங்குகின்றனர். எ. கா. பிள்ளையார்பட்டி, இளையாத்தங்குடி.

இப்படி ஒவ்வொரு சமூகமும் கோத்திரப் பிரிவுகளுடன் விளங்குவதைக் காண முடிகிறது.

ரிக்வேதம், சாந்தோக்ய உபநிடதம், பிருஹதாரண்ய உபநிட-தங்கள் முதலியவைகளில் 'கோத்ரம்' குறிப்பிடப்படுகிறது. கோ[3]-பசு. ஆக மாட்டுத்தொழுவத்தை அல்லது மாட்டுமந்தையைக் குறித்தது. ஆன்மீகத்தில் ஆழ்ந்து முழு முதற்கடவுளைத் தமது மோன நிலையில் கண்டு பரமானந்தம் அனுபவித்துக் கொண்டிருந்த மாமனிதர்களான ரிஷிகள் இல்லறத்தில், சிஷ்யர்களுடன் தபோ-வனங்களில் பசுக்களை வளர்த்துக் கொண்டு வாழ்ந்தனர். எனவே தாம் கண்ட தெய்வீக தரிசனங்களைச் சாதாரண மக்களும் அடைந்து உய்வதற்கு மந்திரங்களை அருளினர். யஜ்ஞத்தில் அக்னி பகவானை அழைக்கும் முறைக்குப் பிரவரம் என்று பெயர். 'புரோஹிதனுடைய பித்ருக்களின் பெயரைக் கொண்டே இவ்வாறு அழைப்பது வழக்கம்' போக்குவரத்து வசதிகள் அதிகம் இல்லாத பழங்காலத்தில் பெரிய-வர்களை வணங்கித் தம்மை அறிமுகம் செய்து கொள்ளும் பொழுது தமது கோத்ரம், பிரவரம், வேதசாகை, பின்பற்றும் சூத்திரம் ஆகியவைகளைக் கூறிக் கொண்டனர் இதற்கு 'அபிவாதனம்' என்று பெயர். ஆசார்ய புருஷர்களையும், மடாதிபதிகளையும் சந்திக்கும் பொழுது இன்றும் இவ்வாறு அந்தணர்களை அபிவாதனம் செய்கின்றனர்.

பிரம்மரிஷி, தேவரிஷி, மஹரிஷி, பரமரிஷி, காண்டரிஷி, ச்ருதரிஷி, ராஜரிஷி என்று ரிஷி கணங்கள் 7 வகைப்படும். ஒவ்வொரு மந்வந்தரத்திலும் ஒவ்வொரு 'ஸப்தரிஷி கணம்' உண்டு ஒரு மந்வந்தரம் என்பது தெய்வீகமான யுகங்கள் 21 சேர்ந்த ஒரு கால அளவு.

அணுயுகத்திலும் பழைய மரபையொட்டி நாட்டுமக்களுக்குக் கூட்டப்பெயர்கள், அடையாளச் சின்னங்கள் உள்ளன. ஒவ்வொரு நாட்டுக்கும் உரிய அடையாளம் கொடி (கொடியிலும் ஒரு சின்னம்) தேசீயக் கொடியுடன் அடையாளப் பறவை, மிருகம், தேசீய கீதம், மொழி, மதம், சின்னம் ஆகியவைகள் தரப்பட்டுள்ளன. இவைகளுக்குச் சிறப்பான மதிப்பும், மரியாதையும் தரப்படுகின்றன. பரத முனிவரின் பெயரால் இந்தியா பாரதம் (BHARAT) என்று அதிகாரப் பூர்வமாக அழைக்கப்படுகிறது. புலி, மயில், தாமரை, ஹிந்திமொழி அசோகச் சின்னம் (பௌத்த மதத்தினரின் புனிதத்தூணின் உச்சி) அசோகச் சக்கரத்துடன் கூடிய மூவண்ணக் கொடி, தேசீய கீதம் ஆகியவைகளின் மரியாதை அரசினரால் பாதுகாக்கப்படுகிறது. நாகரிகத்தின் உச்சியில் உலவும் ஐரோப்பா, அமெரிக்க ஐக்கிய நாடுகளும் தத்தம் பழமையான மரபுகளை ஒட்டி தேசீயச் சின்னங்களை அமைத்துக் கொண்டுள்ளன.

பிரம்ம தேவரின் வேள்வியினின்றும் தோன்றியவர்கள் சப்த ரிஷிகள் : 1. பிருகு 2. அங்கிரஸ் 3. மரீசி 4. அத்ரி 5. புலஹர் 6. புலஸ்தியர் 7. வஸிஷ்டர். இவர்களில் புலஹர் அரக்கர்களையும் புலஸ்தியர் பைஸாஸர்களையும் தோற்றுவித்தனர். ஜமத்கனி, பரத்வாஜர், விஸ்வாமித்திரர், அத்ரி, கௌதமர், காஸ்யபர், வஸிஷ்டர், அகஸ்தியர் ஆகிய எட்டு ரிஷிகள் இப்பரத கண்டத்தின் முதல் வரிசை கோத்திரக்காரர்கள்.

(பிருகு மரபில் உதித்தவர் ஜமதக்னி. பரத்வாஜர், கௌதமர் ஆகியோர் அங்கிரஸ் மரபிலும், காஸ்யபர், வஸிஷ்டர், அகஸதியர் ஆகிய மூவர் மரீசி மரபிலும் தோன்றியவர்கள். அத்ரி ரிஷி அத்ரி மரபினர்.)

க்ஷத்திரியர்களாக இருந்த கீழ்கண்ட 10 பேர்களும் அந்தணர்களாகி புதிய கோத்திரக்காரர்கள் ஆயினர்.

1. வைதஹவ்யர்
2. மித்ரயு (வர்)
3. சுனகர்
4. யவனர்

} பிருகு மரபினர்

5. ரதீதரர்
6. முத்கலர்
7. விஷ்ணுவ்ருத்தர்
8. ஹரிதர்
9. கண்வர்
10. ஸங்க்ருதி

} அங்கிரஸ் மரபினர்

க்ஷத்திரியரான விஸ்வாமித்ர மகரிஷியானவர் தமது ஒப்பற்ற தபோபலத்தால் பிரம்மரிஷியாக மாறினர்; புகழ்பெற்ற காயத்ரி மந்திரத்தை அருளினர்.

ஆக மேலே விவரிக்கப்பட்ட 18 கோத்திரங்களை மிகத் தொன்மையானவைகளாகக் கொள்ளலாம். இக்குடும்பங்கள் தனித் தனிப் பிரிவினராக, பின்னர் தனிக் கூட்டத்தினராகப் பெருகினர். ஒரே ரிஷி பரம்பரையில் வந்த பிரிவினர் சகோதரர்களாகக் கருதப் பட்டனர். எனவே இரத்த சம்பந்தமுடையவர்களுடன் திருமண சம்பந்தம் செய்து கொள்வது கூடாது என்றும், மற்ற 17 கோத்திரத் தவர்களுடன் திருமண உறவு கொள்ளலாமென்றும் விதி வகுக்கப் பட்டது. 'கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு பாத்திரமறிந்து பிச்சையிடு' என்ற பழமொழி இந்த விதியை அனுசரிக்க வேண்டும் என்பதைக் கூறும் பழமொழியாகும்.

காலப்போக்கில் கோத்திரக்காரர்களின் புதல்வர்களும் சில வம்சங்களை ஸ்தாபித்து புதிய கோத்திரங்களை நிறுவினர். இப்படியாக கோத்திரங்களின் எண்ணிக்கை பெருகியது.

ரிஷிகளின் குழுவினர் பிரவர ரிஷிகள் என்று அழைக்கப் பட்டனர். கோத்திரம் எவர் பெயரில் உள்ளதோ அவருடைய 3

தலை முறையினர் (மூதாதையர்) என்பதே ப்ரவரம் என்பதற்குப் பொருத்தமாகும். ஒரே ரிஷி எத்தனைப் பிரவரங்களில் தொடர்பு உள்ளவரோ அத்தனையிலும் சகோதரத்துவம் உண்டு. எனவே திருமண சம்பந்தங்கள் பேசும் பொழுது பிரவரங்களையும் கவனிக்க வேண்டும். (அங்கிரஸ் ப்ரவரம் மட்டும் இதற்கு விதிவிலக்கு)

ஸப்தாரிஷம் (எழுவர் குழு), பஞ்சாரிஷம் (ஐவர் குழு), திரியரிஷம் (மூவர் குழு) என்று 'ப்ரவரம்' வகைப்படுத்தப்படுகிறது. கல்யாண சம்பந்தங்கள் பேசும் இருவரில் ஒருவருடைய கோத்திரத் திரப்ரவரத்தில், திரியாரிஷங்களிலுள்ள 2 ரிஷிகள் இருந்தால் சகோதர முறை ஏற்படும். அதே போல பஞ்சாரிஷ கோத்திரங்களில் 3 ரிஷிகள் ஒத்திருந்தால் சம்பந்தம் செய்யலாகாது. எ.கா: காஸ்யபவும், த³தீசவும் சகோதர கோத்திரங்கள். காரணம் ஒரே பிரவரம்.

சுமார் 275 கோத்திரங்கள் தற்போது வழக்கத்தில் இருந்து வருவதாகப் பெரியவர்கள் கருதுகின்றனர். கோத்திரங்கள் எப்பொழுதும் அதற்குரிய பிரவரங்களுடன், வேத, ஸூத்ரங்களுடன் குறிப்பிடப்படுவது மரபு.

கோத்திரங்கள் ஆயிரக்கணக்கில் இருந்தாலும் இவற்றின் பிரவரங்களை ரிஷிகளின் மூலம் கணக்கிட்டால் 50-க்கும் குறைவு என்கிறார் போதாயனர்.

ச்ரௌத ஸூத்திரங்களின்படி கோத்திரங்கள் சுமார் 2463. இவற்றுக்குரிய பிரவரங்கள் 86.

ஒரே கோத்திர, பிரவரத்தில் திருமணம் செய்வது பாபம். தப்பித் தவறி அப்படி ஒரு சம்பந்தம் நிகழ்ந்தால் ஒருவன் தன் மனைவியைத் தாய் போலக் காப்பாற்ற வேண்டும். அவளிடம் பிறந்த குழந்தைகள் தாழ்ந்த குலத்தவராகிறார்கள். அதிகிருச்சிரம், சாந்திராயணம் முதலிய பிராயச்சித்தங்களை ஆயுள் முழுவதும் செய்ய வேண்டும்.

சான்ருேர்கள் பிற்காலத்தில் சமயோசிதமாக, சந்தர்ப்பவச மாக நடந்து கொள்வதை (சாஸ்திர விதிகளை மீறி அமைந்தாலும்) சமுதாயம் ஏற்றுக்கொண்டது. இதற்கு 'ஸிஷ்டாசாரம்' அதாவது மேன்மக்கள் பின்பற்றிய ஒழுக்க முறை என்று பெயர். இதன்படி வட இந்தியாவில் கண்டிப்பாகத் தடுக்கப்பட்டுள்ள சாஸ்திர விதி முறைகளில் சில தென் இந்தியாவில் தளர்த்தப்பட்டுள்ளதைக் காணலாம். ஒருவன் தனது தாய்மாமன் மகளையும், அத்தை மகளை யும் மணம் செய்து கொள்வது கூடாது. ஆனால் தென்னாட்டில் இப்பழக்கம் பிராமணர்கள் உட்பட அனேகமாக எல்லாப் பிரிவின ரிடையே காணப்படுகிறது. ஸெளராஷ்டிர சமூகத்திலும் இந்தப் பாரம்பரியம் காணப்படுகிறது. தந்தை வழியிலும், தாய்வழியிலும், 4 தலைமுறைகள் கழிந்த பின் ஆபத்துக் காலங்களில் சம்பந்தம் செய்வது நடைபெறலாமென சிலர் கூறுகின்றனர். சிதம்பரம் தீட்சிதகர்கள் உள்ளூரில் திருமண உறவுகளை வைத்துக் கொள்வதில் மற்ற பிராமணர்களினின்றும் வேறுபடுகின்றனர். மதுரை நகர ஸெளராஷ்டிர சமூகத்தினரும் உள்ளூரில் கல்யாண சம்பந்தங்களை வைத்துக் கொள்கின்றனர் (குடும்பப் பெயரைக் கேட்டவுடன் சொந்த ஊரைக் கண்டு கொள்கின்றனர்.)

ஸெளராஷ்டிர மொழி பேசும் மக்கள் மொத்தம் 64 கோத்திரங் களில் அடங்குவர். இருப்பினும் 40 கோத்திரங்களுக்குரிய சுமார் 567 குடும்பப் பெயர்கள் இதுவரைக்கும் பதிவு செய்யப்பட்டுள்ளன 24 கோத்திரங்களுக்குரிய குடும்பப் பெயர்கள் கிடைக்கவில்லை என்று அறியப்படுகிறது. இவர்கள் வடநாட்டில் அல்லது ஆந்திர, கன்னட மாநிலங்களில் தங்களுடைய தனித்தன்மையைக் காத்துக் கொள்ள முடியாமல் போயிருக்கலாம். எனவே அவைகளைச் சேகரிக்க முடிய வில்லை! இருந்தாலும் இன்னும் முயற்சி செய்தால் இக்கோத்திரங் களுக்குரிய குடும்பப் பெயர்களைக் கண்டு பிடிக்க முடியும்.

நடைமுறையில் உள்ள 40 கோத்திரங்களாவன :

அக$^3$ஸ்திய, ஆங்கீ$^3$ரஸ, ஆத்ரேய, உத$^3$ங்க$^3$, உபமன்யு, கண்வ, காஸ்யப, கௌண்டி$^3$ன்ய, கௌஸிக, கௌ$^3$தம, ச்யவன, த$^3$தீ4ச, ஜமத$^3$க்$^3$னி, ஜான்ஹு, ஜாபா$^3$லி, து$^3$ர்வாஸ, பராஸர, பிப்பல,

பா4கீ3ரத2, பா4ரத்வாஜ, பா4ர்க3வ மத1ங்க3, மந்த3பா3ல, மரீசி, மாண்ட4வ்,ய மார்கண்டே2ய, மைத்ரேய, மௌஞ்ஜாயன, மௌத்க3ல்ய, வாமதே3வ, வால்மீகி, விஸ்வாமித்ர, வ்யாஸ, ஸரப4ங்க3, ஸா்லிக, ஸுமந்த3, ஸௌப3ரி, ஶௌனக, ஸ்ரீவத்ஸ, ஹரித.

குடும்பப் பெயர்களின்றிப் பதிவாகியிருக்கும் 24 கோத்திரங்கள்
அருணி, அஸித, இத்4மவாஹ, உஸேன, உஷ்ணீஷ், ஔர்வ, கவஸ, குபித, கௌத்ஸ, கௌமந்த3, கா3ர்கே3ய, கா3லவ, ஜைமினி, தே3வல, பைலவ, ப்ரமதி, மேதா3திதி, வத்ஸ, வஸிஷ்ட, வாத்ஸாயன, வைஸம்பா3யன, ஸக்தி, ஸாண்டி3ல்ய, ஸாலிஹோத்ர

# ஸௌராஷ்டிர கோத்திரங்களின் தனிச்சிறப்பு விவரம்

அகில இந்திய அளவில் ஒவ்வொரு மொழிபேசும் பிராமணர்களுக்கும் ரிஷி கோத்திரம், பிரவரம் நூற்றுக்கணக்கான தலைமுறைகளாக விளங்கி வருகின்றன. பிராமணர் அல்லாத கூட்டத்தினரும் தமக்கென கோத்திரங்களுக்குப் பதில் மரம், பறவை, இடம், குறிப்பிட்ட பொருட்கள் ஆகியவைகளின் பெயர்களைப் பயன்படுத்தி வருகின்றனர். (முக்கியமாகத் திருமண சம்பந்தங்கள் செய்யும் பொழுது) புராண, இதிகாசப் புகழ் பெற்ற ஸௌராஷ்டிர தேசத்திலிருந்து தென்னாடு வந்து சேர்ந்த ஸௌராஷ்டிர மக்கள் ரிஷி கோத்திரங்களுடன், பிரவரங்களையும் பரம்பரையாகக் கூறிக் கொள்கின்றனர். இத்துடன் ஒவ்வொரு கோத்திரத்திற்கும் அதற்குரிய நட்சத்திரம் தாரா, தே3வதை, க3ணம், வாஹனம், பறவை, மரம் 'வான்', ஆரிஷம் ஆகியவைகள் உண்டு. இவைகளே ஸௌராஷ்டிர சமூக கோத்திரங்களுக்குரிய தனிப்பெருஞ்சிறப்பு எனலாம். பிரவரங்கள், திரியாரிஷம் (3 ரிஷிக்கூட்டம்), பஞ்சாரிஷம் (5 ரிஷிக்கூட்டம்) ஆகியவைகள் வழங்கப்படுகின்றன.

ஸௌராஷ்டிரர்கள், யஜுர் வேதப் பிரிவைச் சேர்ந்தவர்கள், அதாவது யஜுர் வேதத்தைக் காப்பாற்றக் கடமைபட்டவர்கள்.

ஆபஸ்தம்ப ஸூத்திரத்தின்படி வைதீகக் கர்மங்களை (சடங்குகளை) நடத்திக் கொள்கின்றனர். ஒவ்வொரு கோத்திரத்திற்கும் ஒரு சமஸ்கிருத ஸ்லோகம் உண்டு. அதில் மேலே சொல்லப்பட்ட விவரங்கள் அடங்கியுள்ளன. ஜோதிட சாஸ்திரப்படி ஸௌராஷ்டிர சமூக கோத்திரம் முதலிய அம்சங்கள் அமைந்துள்ளதாக கூறப்படுகிறது.

வைதீகச் சடங்குகளின் போதும், உபாகர்மத்தின் (பூணூல் மாற்றும் விழா) போது கோத்திர, ரிஷி, பிரவரங்களைக் கூறிக்கொள்வது கட்டாயமாக இருந்து வருகிறது. குடும்பப் பெயர்கள் பிற்காலத்தில் பட்டப் பெயர்களாகப் (தொழில், பழக்க வழக்கங்கள், பதவி, மூதாதையர் பெயர், ஊர்ப்பெயர்கள் ஆகிய பல காரணங்களால்) பெருகி விட்டன. அவைகள் வைதீகச்சடங்குகளின் பொழுது கூறப்படுவதில்லை; மேலும் இயற்பெயர்களுடன் 'ஸர்மா' என்ற பட்டத்தைச் சேர்த்துக்கொள்வர் அகில இந்திய அளவில் பிராமணர்களுக்குரிய பட்டப்பெயர் 'ஸர்மா'. அய்யர், அய்யங்கார், சாஸ்திரி, கனபாடி முதலிய பட்டப்பெயர்கள் பிற்காலத்தில் ஏற்பட்டவை. 3 தலைமுறை முன்னோர்களை வைதீகக் காரியங்களின் பொழுது சொல்லி வணங்க வேண்டியது மரபு.

K. S. நேமிதரன் - இந்தப் பெயரைக் கொண்டு கோத்திர விளக்கம் செய்வோம்.

முழுப்பெயர் : குட்டின் சேதுராமன் நேமிதரன்

இதில் குட்டின் குடும்பப் பெயர்

சேதுராமன் - தந்தை பெயர்

நேமிதரன் - இயற்பெயர்

குட்டின் என்ற குடும்பப்பெயர் ஸௌனக கோத்திரத்தைச் சேர்ந்தது.

ஸௌனக கோத்திரத்தில் 1951-ல் 87 குடும்பப் பெயர்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதுவே மிகப் பெரிய கோத்திரக் கூட்டமாக விளங்குகிறது. உண்மையில் இவர்கள் அனைவரும் சகோதர உறவு கொண்டவர்கள்; பல்வேறு ஊர்களில் வசிக்கும் இவர்கள் சுமார் பல்லாயிரக்கணக்கான குடும்பங்களாகப் பெருகியுள்ளனர்.

குட்டின் குடும்பப்பிரிவினர் பல்வேறு தொழில்களில் ஈடுபட்ட தால் பிற்காலத்தில் பட்டப்பெயர்கள் ஏற்பட்டன. (நெளி வகையரு, திக³ரம் வகையரு, ஐயான் வகையரு, அதாவது நெசவாளர்களுக்குத் தேவையான நாடா, மூங்கில் கழி வியாபாரம் செய்த பிரிவினர், மண்ணெண்ணெய் வியாபாரம் செய்த பிரிவினர், புரோஹிதம் புரிந்த பிரிவினர்). சென்னையில் தங்கிவட்ட பிரிவினர் 'பட்ணமு குட்டின்' என்று அழைக்கப்பட்டனர். சாயப்பவுடர் வியாபாரம் செய்த குடும்பத் தவர்களை 'ரெங்கு³ பு4ர்க்கா அங்கி³டி குட்டின்' என்று குறித்தனர். வ்யாஸ கோத்திரத்திலும் 'குட்டின்' குடும்பப்பெயர் காணப்படுகிறது. இருப்பினும் அதைப்பற்றி எந்த விவரமும் தெரியவில்லை!

குட்டின் குடும்பத்தவர் மதுரையைச் சேர்ந்த வடகலை வைஷ்ணவர்கள். திருப்பதி வெங்கடேசப் பெருமாளைக் குலதெய்வ மாகக் கொண்டவர்கள். 3 தலைமுறை மூதாதையர்களின் பெயர்கள் :

1. குட்டின் சு. குப்புசாமி அய்யங்கார்
2. குட்டின் கு. ராமாச்சாரி
3. குட்டின் ரா. சேதுராமன்

## ஸௌனக கோத்திரம்

மொல்கவான் — த்ரியாரிஷம்

### ஸ்லோகம்

ரக்தம் புமான் மாருத தே³வதாக்³யோ
க³ணம்ச தே³வோ மஹிஷஸ்ச யோனி :
பக்ஷி ஸுகோ2 பி²ல்வமஹீருஹைகம்
ஸஸௌனகாஹும் ஸரப4ங்க³ஜாஹும்

| | | | |
|---|---|---|---|
| 1. | நட்சத்திரம் | : | ஸ்வாதி |
| 2 | தாரா | : | ஏகதாரா |
| 3. | க3ணம் | : | தே³வ³கணம் |
| 4. | தே3வதை | : | வாயுப4க3வான் |
| 5. | வாஹனம் | : | எருமை |
| 6. | பறவை | : | கிளி |
| 7 | மரம் | : | வில்வமரம் |

8. வான் : மொல்கவான் (மூலகவான்)
9 ஆரிஷம் : த்ரியாரிஷம் (3 ரிஷி குடும்பத்தினர்)

ப்ரவரம் : 1. ஸௌனக
2. ஹோத்ர
3. க்ருத்ஸ் நமத3

மேலே கண்டுள்ள 1 முதல் 7 அம்சங்கள் ஸரப4ங்க கோத்திரம், ஸௌனக கோத்திரம் ஆகியவைகளுக்குப் பொதுவானவை.

# மதுரையில் கோத்திரங்கள்

ஸௌராஷ்டிர சமூகத்தினரின் தலைநகராக மதுரை நகரம் விளங்குகிறது. இங்கு இம்மக்கள் பெரும்பான்மையினராக வாழ்ந்து வருகின்றனர் தமிழ் நாட்டின் கலாசாரச் சிறப்பு வாய்ந்த நகராக விளங்குவதற்கு இச்சமூகத்தினர் காரணமாக விளங்குகின்றனர். தமது பாரம்பரியத் தொழில்களான கைத்தறி நெசவு, பட்டு, நூல், துணி, சாய வணிகம், சாயமிடுதல் மற்றும் இதன் தொடர்பான கைத்தொழில்கள், குடிசைத் தொழில்கள் முதலியவைகளில் ஈடு-பட்டுள்ளனர். இருப்பினும் துணிச்சலுடன் புதிய பல தொழில்களை மேற்கொண்டு சாதனைகளைச் செய்துள்ளனர். மதுரை ஸௌராஷ்டிர சபை 1934-ல் சமூக மக்கள் கணக்கெடுப்பு (ஸென்ஸஸ்) நடத்தியது. இதன்படி 36 கோத்திரங்களை மதுரை நகர ஸௌராஷ்டிர சமூக மக்களிடையே காணமுடிகிறது; இம்மக்களின் மொத்த எண்ணிக்கை 1934-ல் 41,514. மிக அதிகமான எண்ணிக்கை கொண்ட சில கோத்திரங்கள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸௌனக | - | 7011 பேர் | ஜாபா³லி | - | 5263 பேர் |
| மார்கண்டே³ய | - | 3255 ,, | பா4ரத்³வாஜ | - | 3492 ,, |
| உபமன்யு | - | 2170 ,, | ச்யவன | - | 1807 ,, |
| பராஸர | - | 1754 ,, | ஜன்ஹு | - | 1729 ,, |
| ஸாலிக | - | 1752 ,, | மரீசி | - | 1543 ,, |
| அகஸ்த்ய | - | 1381 ,, | ஜமதக்னி | - | 1305 ,, |
| த³தீ4ச | - | 1245 ,, | | | |

மிகக் குறைந்த மக்கள் எண்ணிக்கை கொண்ட கோத்திரங்கள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கௌஸிக | - 3 | பேர் | வால்மீக | - 5 | பேர் |
| விஸ்வாமித்ர | - 14 | ,, | ஸுமந்த | - 41 | ,, |
| மைத்ரேய | - 56 | ,, | கண்வ | - 86 | ,, |
| ஸௌபரி | - 101 | ,, | | | |

500 பேர்களுக்கு மேற்பட்ட கோத்திரங்கள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆத்ரேய | - 534 | பேர் | கௌண்டி³ன்ய | - 623 | பேர் |
| மௌத்க³ல்ய | - 546 | ,, | வ்யாஸ | - 602 | ,, |
| மாண்ட³வ்ய | - 568 | ,, | | | |

500 பேர்களுக்கும் குறைந்த எண்ணிக்கையுடைய கோத்திரங்கள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பா4ர்க³வ | - 482 | பேர் | பீப்பல | - 257 | பேர் |
| மத³ங்க³ | - 427 | ,, | மந்த³பா³ல | - 195 | ,, |
| உத³ங்க³ | - 393 | ,, | ஸ்ரீவத்ஸ | - 190 | ,, |
| ஸரபா4ங்க³ | - 335 | ,, | தூ³ர்வாஸ | - 163 | ,, |
| ஹரித | - 298 | ,, | | | |

கிடைத்துள்ள 40 கோத்திரங்களில் 36 கோத்திரங்கள் மதுரையில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

மேலே கண்டுள்ள விவரங்கள் மதுரையில் கோத்திர எண்ணிக்கை பற்றி ஒப்பு நோக்கி ஆராய நமக்கு உதவும். எண்ணிக்கையில் மிகக் குறைந்த கூட்டத்தினர் திருமண சம்பந்தம் செய்து கொள்ளும் விஷயத்தில் அதிர்ஷ்டம் செய்தவர்கள். ஏனென்றால் மற்ற எல்லா கோத்திரங்களிலும் சம்பந்தம் செய்ய அவர்களுக்கு வாய்ப்பும். உரிமையும் அமைகின்றது. ஸௌனக, ஜாபா³லி, மார்க்கண்டே³ய, பா4ரத்³வாஜ. உபமன்யு கோத்திரங்கள் மொத்த மக்கள் தொகையில் 50%க்கும் மேல். எனவே இக்கோத்திரத்தவர்களின் நிலைமை திருமண விஷயத்தில் கொஞ்சம் சிரமம் தான்!

இந்த 5 கோத்திரத்தவர்கள் ஒருவருக்கொருவர் சம்பந்தம் செய்து கொள்ளும் வாய்ப்பு இயற்கையாக அமைந்துள்ளது.

புகழ்பெற்ற மகான்கள், இலக்கியப் பேரறிஞர்கள், கலைஞர்கள் பெரும்பாலும் இந்த 5 கோத்திரத்தவர்களாகவே அமைதி, துள்ளனர்.

மதுரையில் ஸௌ. சமூகத்தினர் பெரும்பாலும் 'அய்யர், சாரி, ராவ்', என்றும், புரோகிதர்கள் 'அய்யங்கார், சாரி, சர்மா' என்றும் தமது பெயர்களுடன் சேர்த்துக் கொள்வர். இவர்கள் திருமண சம்பந்தம் நிச்சயிக்கும் பொழுது மேலே கண்ட ஜாதிப் பட்டங்களைப் பொருட்படுத்துவதில்லை! ஸ்மார்த்த, வைஷ்ணவ, மாத்வப் பிரிவுகளைப் பற்றியும், செய்யும் தொழில்களையும், சைவ, அசைவ உணவுப் பழக்கங்களைப் பற்றியும் கவலைப்படுவதில்லை! ஸௌராஷ்டிர மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவரா, குடும்பப் பெயர், கோத்திரப் பெயர் என்ன – இந்த விஷயங்களை மட்டும் கவனிக்கின்றனர். ஸௌராஷ்டிர மக்களுக்குரிய ஜாதிப் பட்டங்களைப் பற்றிய குறிப்பு வரலாற்றில் கிடைக்கவில்லை! ஆங்கில ஆட்சி காலத்தில், நமது நாட்டில் ஜாதிஉணர்வு பொங்கிய காலத்தில் ஸௌ. மக்கள் அய்யர், அய்யங்கார், முதலிய ஜாதிப்பட்டங்களைப் போட்டுக் கொண்டார்கள். இந்தியா விடுதலை அடைந்த பிறகு இவர்கள் தமது ஜாதிப்பட்டங்களை நீக்கி விட்டனர்.

ஸௌ. சமூகத்தைப் பற்றி அறியாதவர்கள், அதிகாரிகள் அய்யர், அய்யங்கார் என்ற பெயர்களைக் கேட்டவுடன் 'முன்னேறிய சமூக மக்கள்' எனத் தவறுதலாகக் கருதுகின்றனர். பல நூற்றாண்டு காலங்களாக, பரம்பரையாக இம்மக்கள் கைத்தறி உற்பத்தி, வியாபாரம், சாயமிடுதல் மற்றும் இதன் தொடர்பான சிறுதொழில் களில் ஈடுபட்டு வந்ததால் தமது குழந்தைகளைக் கல்வி கற்க அனுப்பவில்லை! கைத்தறித் தொழிலின் எதிர்காலம் நம்பிக்கை தருவதாய் இல்லை; இதன் வாழ்வும், வீழ்ச்சியும் ஸௌ. சமூகத்தை ஒட்டு மொத்தமாகப் பாதித்து வருகின்றன. ஏழைத் தொழிலாளர்கள்

நடுத்தர மக்கள் நிறைந்த இச்சமூகம் பொருளாதாரத்தில் கல்வி கற்பதில் மிகவும் பின்தங்கியிருந்து வருவதைக் கண்ட அரசாங்கம் இவர்களைப் பிற்பட்ட சமூகமாக ஏற்றுக்கொண்டுள்ளது.
(Annexure-1, List of Backward Classes throughout the State of Tamil Nadu. S.No. 99: SOURASHTRA [PATTUNULKARAR])

ஸௌராஷ்டிர மொழியைப் பேசும் இச்சமூகத்தை ஒரு தனி ஜாதியாகக் கொள்ள முடியாது; ஸௌராஷ்டிர இனம் என்று கருதுவதே பொருத்தமாக அமையும். பொருளாதார வீழ்ச்சியடைந்துள்ள இச்சமூகத்திற்கு மாநில அரசு பிற்பட்ட வகுப்பினரின் சலுகைகளை அளித்து வருவதால் கல்வி கற்பவர்கள் தொகையும், புதிய தொழில்களை மேற்கொள்ளும் முயற்சியும் கூடி வருகிறது. இச்சமூகத்தினர் நடத்தி வரும் பள்ளிகளுக்கு மத்திய அரசு மொழிவாரி சிறுபான்மையினருக்குரிய சலுகை அளித்துள்ளது. இதன்படி தமது மொழி, கலாசாரப் பாதுகாப்பிற்காக தமது கல்வி நிலையங்களை இச்சமூகத்தவர்களே நிர்வாகம் செய்து கொள்ளலாம்.

பொருளாதார காரணங்களை முன்னிட்டும், தமது கலாசாரத் தனித்தன்மைகளைப் பாதுகாக்கவும் மதுரை நகர ஸௌ சமூகத்தினர் உள்ளூர் சம்பந்தங்களை விரும்புகின்றனர் எனவே மாப்பிள்ளை அழைப்பு, சம்பந்திகளைத் தங்க வைத்தல், விருந்து உபசாரச் செலவுகள் இல்லை! உள்ளூரில் எல்லா உறவினர்களும் வசிப்பதால் குடும்ப விசேஷங்களில் எல்லாரும் தவறாமல் கூடி சம்பிரதாயமாக நடத்துகின்றனர். பரம்பரையாக நெசவுத் தொழில் செய்து வரும் சமூகங்களில் இந்த மரபு காணப்படுகிறது. வரதட்சிணை வழக்கம் இவர்களிடம் இல்லை! ஆனால் சமீப காலத்தில் டாக்டர், என்ஜினீயர் மணமகன்களின் பெற்றோர்கள் படிப்புச் செலவுக்குப் பணம் வேண்டும் என்று கேட்கத் தொடங்கினர். அரசினரின் பிற்பட்ட வகுப்புச் சலுகையில் படிப்பை முடித்துள்ளதை மறந்து விடுகின்றனர். ஆனால் மணப்பெண்ணின் பெற்றோர்களிடம் 'தே'ஸ் ஹன்னவ்' (பரிசப் பணம்) கொடுக்கும் வழக்கம் இன்றும் இருந்து வருகிறது.

# கோ3த்திர அகராதி

1 2 3 4 5 6 7 8 9 10 11

**கோ3த்திரம்** — **நக்ஷத்ரம் - தாரா - தே3வதை - க3ணம் - வாஹனம் - பறவை - மரம் - வான் - ஆரிஷம் - ப்ரவரம்**

1. **அக3ஸ்த்ய** — புனர்வஸு (புனர்பூஸ) - பஞ்சதாரா - ஸுர்யன் - தேவ - பூனை - அன்னப்பறவை - வேணுமரம் (மூங்கில்) - விடலவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. அக3ஸ்த்ய, 2. தா3ர்ட்3யாச்சுத, 3. இத்3மவாஹ.

2. **ஆங்கீ3ரஸ** — புஷ்ய (பூஸம்) - த்ரிதாரா - தே3வகு3ரு (வியாழன்) – தே3வ – ஆடு - நீர்க்காக்கை - அரசமரம் - கண்ணுவான் (கணவான்) – த்ரியாரிஷம் – ப்ரவர : 1 ஆங்கீ3ரஸ, 2. ஆயாஸ்ய, 3. கௌ3தம.

3. **ஆத்ரேய** — சித்தா (சித்திரை) - ஏகதாரா – விஷ்வகர்மா – ராக்ஷஸ – புலி - அன்னப்பறவை - வில்வமரம் – தாரவான் – த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஆத்ரேய, 2 அர்ச்சனஸ, 3. ஸ்யாவாஸ்வ.

4. **உத3ங்க3** — உத்திரட்டாதி3 - த்3விதாரா - பரமசிவன் - (அஹிர்புத்னிய தேவன்) - மனுஷ்ய – கறவைப்பசு - பிங்களப் பறவை (ஆந்தை) - வேப்பமரம் - திலகவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஆத், 2. அர்ச், 3. ஸ்யாவா.

5. **உபமன்யு** — ஹஸ்தா – பஞ்சதாரா - ஸுர்யன் - தே3வ - எருமை (பெண்) - கிளி - நாவல்மரம் - கந்து3ல்வான் - த்ரியாரிஷம் ப்ரவர : 1. வஸிஸ்ட, 2. இந்த்3ரப்மத3, 3. ப4கீ3ரத3.

6. **கண்வ** — ஆஸ்லேஷ (ஆயில்யம்) - ஷட்தாரா – ஆதி3ஸேஷன் - ராக்ஷஸ - பூனை (பெண்) - பே4ரண்ட3ப்பறவை - புன்னை மரம் – கின்னரிவான் (கின்னரவான்) த்ரியாரிஷம் – ப்ரவர : 1. ஆங்கீ3ரஸ, 2. அஜாமிட்3ன, 3. கண்வ

7. **காஸ்யப** — ஆருத்3ரா (திருவாதிரை) – ருத்3ரன் – மனுஷ்ய - நாய் (ஆண்) – சக்ரவாகப் பறவை (க்ரௌஞ்ஜம்) – இலந்தைமரம் - கிஸுள்வான் (கிஸலவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1 காஸ்யப, 2. ஆவத்ஸாள, 3. நைத்ருவ.

8. **கௌண்டி3ன்ய** — க்ருத்திகா (கார்த்திகை) – ஷட்தாரா – அக்3னி - ராக்ஷஸ - ஆடு - மயில் – அத்தி – தூ4மாட்டிவான் (தூ4ம்யாடவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. வஸிஷ்ட, 2. மைத்ராவருண, 3. கௌண்டி3ன்ய.

| | | |
|---|---|---|
| 9. | கௌஸிக | ப4ரணி - த்ரிதாரா - எமத4ர்மன் - மனுஷ்ய - யானை - காகம் - நெல்லி மரம் - ஸாலிவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. விஷ்வாமித்ர, 2. அக4மர்ஷண, 3. கௌஸிக. |
| 10. | கௌ3த3ம | ரோஹிணி - பஞ்சதாரா - ப்3ரஹ்மா - மனுஷ்ய – ஆதி3ஸேஷன் – ஆந்தை - நாவல் மரம் - கேதா3ரிவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஆங், 2. ஆயா, 3. கௌ3த3ம. |
| 11. | ஜமத3க்3னி | மகம் - டஞ்சதாரா - பித்ரு - ராக்ஷஸ - பெருச்சாளி - காகம் - ஆலமரம் - சலகவான் (கௌனவான்)-பஞ்சாரிஷம் ப்ரவர : 1. பா4ர்க3வ, 2. ச்யவன, 3. அப்னுவான, 4. ஔர்வ, 5. ஜமத3க்3னி. |
| 12. | ஜன்ஹு | ம்ருக3ஸீர்ஷம் - த்ரிதாரா - சந்த்3ரன் - தே3வ - நாகப்பாம்பு - சேவல் - இலந்தைமரம் - குட்வான் (கடுவான்)- த்ரியாரிஷம் – ப்ரவர : 1. விஷ்வாமித்ர. 2. ஸாலங்கா3யன, 3. கௌஸிக. |
| 13. | ஜாபா3லி | வேணுவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஜாபா3லி, 2 ஆஸிர்ஷேண, 3 அநுப. மற்றவை ஜன்ஹுவில் உள்ளவைகளே. |
| 14. | த3தீ4ச | ஹஸ்தா – பஞ்சதாரா – ஸூர்யன் - தே3வ - எலி (பெண்) - கிளி – நாவல் மரம் - ஜகு3வான் (ஜக3வான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 'காஸ்யப' வில் உள்ளவைகளே. |
| 15. | தூ3ர்வாஸ | விஸாக3ம் – சதுஸ்தாரா – ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி – ராக்ஷஸ – புலி – ஆந்தை - விளாமரம் – தா4மாரிவான் (கௌரிவான்) - காரிவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1 ஸாண்டி3ல்ய, 2. அஸித, 3 தே3வல. |
| 16. | பராஸர | புனர்வஸு (புனர்பூஸம்) - பஞ்சதாரா - ஸூர்யன் - தே3வ - பூனை – அன்னப்பறவை - வேணு (மூங்கில்) - பொ4கு3னுவான், போமவான். (பூ4கு3ணவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர: 1. வஸிஷ்ட 2. ஸாக்தேய 3 பராஸர |
| 17. | பிப்பல | மூலா - பஞ்சதாரா - நைருதி - ராக்ஷஸ - நாய் - சக்ரவாகம் (செம்போத்துப்பறவை)-மராமரம் - ஸுரதானுவான் (ஸுதாருணிவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. வஸி, 2. மைத், 3. கௌண் |
| 18. | ப4கீ3ரத2 | உத்திர - த்3விதாரா - அர்யமா - மனுஷ்ய - ரிஷபம் - கருடப்பறவை - அரசமரம் - தா3ணவான் (ப3த3ரிவான்) த்ரியாரிஷம் - ப்ரவர : 1. வஸி, 2. மைத், 3. கௌண். |
| 19. | பா4ரத்3வாஜ | லகு3டு3வான் (லகு3ட3வான்) - த்ரியாரிஷம் - ப்ரவர 1. ஆங்கீ3ரஸ 2. பா4ர்க3ஸ்பத்ய, 3. ப4ர3த்வாஜ தவிர மற்றவை 'ப4கீரத' கோத்திரத்தில் உள்ளவை. |

| | | |
|---|---|---|
| 20. | பா4ர்க3வ | பொ4கு3ளுவான் (டே 3ளவான்) - பஞ்சாரிஷம் - ப்ரவர : 'ஜமதக்னி' கோத்திரத்தில் உள்ளவைகளே. இவைகளைத் தவிர மற்றவை 'காஸ்யப' கோத்திரத்தில் உள்ளவைகளே. |
| 21. | மத3ங்க3 | அஸ்வனி - ஹயக்3ரீவர் / அச்வனி தேவர்கள் – த்ரிதாரா – தே3வ - குதிரை - ராஜாளி (பேரண்டம்) விஷமிருஷ்டிமரம் / க்4ருணுவான் - கு3ணவான் - ப்ரவர : 1. ஆத், 2. அர், 3. ஸ்யா. |
| 22. | மந்த3பா3ல | அனுஷம் - த்ரிதாரா – ஸூர்யன் - தே3வ - மான் (பெண்) - கிளி - பலாமரம் - ஹம்ஸவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. விஷ்வாமித்ர, 2 தே3வராத, 3 ஔதல. |
| 23. | மரீசி | கு3ஜூலுவான் (கு3ஜலவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. காஸ்யப 2. அஸித, 3. தே3வல தவிர மற்றவை 'பராஸர' கோத்திரத்தில் உள்ளவை. |
| 24. | மாண்ட3வ்ய | ஜம்புவான் - பஞ்சாரிஷம் - ப்ரவர: 'ஜமத3க்3னி' கோத்திரத்தில் உள்ளவை. மற்றவை 'கௌசிக' கோத்திரத்தில் உள்ளவை |
| 25. | மார்கண்டே3ய | ஸல்கவான் (ஸலகுவான்) - பஞ்சாரிஷம் - ப்ரவர : 'ஜமத3க்3னி' யில் உள்ளவை. மற்றவை 'ஆங்கீரஸ'வில் உள்ளவை. |
| 26. | மைத்ரேய | காளவான் - த்ரியாரிஷம் - ப்ரவர: 1. பா4ர்க3வ, 2. விஸ்வதே3ய, 3. தா3ஸ மற்றவை 'மத3ங்க'வில் உள்ளவை |
| 27. | மௌஞ்ஜாயன | ஸ்ருங்கா2ரிவான் - த்ரியாரிஷம் - ப்ரவர: 1. காஸ்யப 2. வத்ஸார 3. ஸாண்டி3ல்ய மற்றவை 'கண்வ'வில் உள்ளவை. |
| 28. | மௌத்3க3ல்ய | பா4மவான் - த்ரியாரிஷம் ப்ரவர : 1. ஆங்கீ3ரஸ, 2. பௌ4ர்ம்யஸ்வ, 3. மௌத்4க4ல்ய. மற்றவை 'மத3ங்க'வில் உள்ளவை, |
| 29. | வாமதே3வ | பூரம் (புப்3பா3 பூர்வப2ல்கு3னி) – த்ரிதாரா - ஸூர்யன் - மனுஷ்ய - பெருச்சாளி - கழுகு - பலாமரம் - ப4ண்டா3ரிவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஆங்கீ4ரஸ, 2. வாமதே3வ, 3. கௌ3த3ம |
| 30. | வால்மீகி | ஜ்யேஷ்டா2 (கேட்டை) – த்ரிதாரா - தேவேந்தி3ரன் - ராக்ஷஸ - மான் (ஆண்) - கிளி – இலவமரம் - ஜவாருவான் (கோகிலவான்) - பஞ்சாரிஷ - ப்ரவர : 'ஜமத3க்3னி' யில் உள்ளவை. |

**31. விஸ்வாமித்ர** — வாமதே3வவான் / ஜமுடு3வான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. விஸ்வாமித்ர, 2. தேவராத், 3. ஔதல. மற்றவை 'காஷ்யப'வில் உள்ளவை.

**32. வயாஸ** — க4னபட2வான் (கன்னட3வான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. வஸிஷ்ட2, 2 மைத்ராவருண, 3. கௌண்டி3ன்ய மற்றவை 'வாமதே3வ'வில் உள்ளவை.

**33. ச்யவன** — மாட3லவான் (மாட3ரவான்) – பஞ்சாரிஷம் - ப்ரவர : 'ஜமத3க்னி'யில் உள்ளவை. மற்றவை 'கண்வ'வில் உள்ளவை

**34. ஸ்ரீவத்ஸ** — குந்த3ளவான் (அருள்வான்) - பஞ்சாரிஷம் - ப்ரவர : 'ஜமத3க்னி'யில் உள்ளவை. மற்றவை 'ஆத்ரேய'வில் உள்ளவை.

**35. ஸரப4ங்க3** — ஸ்வாதி3 - ஏகதாரா - வாயுப4க3வான் - தே3வ – எருமை - கிளி - வில்வமரம் - அஜுல்வான் (அஜிதவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஆங்கீ3ரஸ, 2. அம்ப3ரீஷ, 3. யவனஸ்வ.

**36. ஸாலீக** — சிந்த3லவான் - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. விஸ்வாமித்ர, 2 தே3வராத, 3. ஔதல. மற்றவை 'கௌண்டி3ன்ய'வில் உள்ளவை.

**37. ஸுமந்த** — அவிட்டம் - த்ரிதாரா - அஷ்டவஸுக்கள் - ராக்ஷஸ - சிங்கம் (பெண்) - வண்டு – வன்னிமரம் - செலுகவான் (சிலுகவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. விஸ்வா, 2. தே3வ, 3. ஔதல.

**38. ஸௌப4ரி** — பூரட்டாதி3 - த்3விதாரா - அஜைகபாத்3 (இந்தி3ரன்) - மனுஷ்ய - ஸிம்மம் - கரும்புரு - தேன்மா மரம் - ஸாப3ளவான் (ஸம்சளவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. காஸ்யப, 2. அஸித, 3 வத்ஸார.

**39. ஸௌனக** — மொல்கவான் (மூலகவான்) - த்ரியாரிஷம் - ப்ரவர : 1. ஸௌனக, 2. ஹோத்ர, 3. க்ருத்ஸ்நமத3. மற்றவை 'ஸரப4ங்க3'வில் உள்ளவை.

**40. ஹரித** — கீ3தவான் - த்ரியாரிஷம் – ப்ரவர : 1. ஆங்கீ3ரஸ, 2 அம்ப3ரீஷ, 3. யவனஸ்வ. மற்றவை 'பிப்பல'வில் உள்ளவை.

**(பிறைக்குறிகளுக்குள் உள்ளவைகள் பிரம்மஸ்ரீ** பு. வெ. **ராமய்யங்காருடைய 'ஆபஸ்தம்ப ஸூத்ர யஜுர்வேத கோத்ரப்ரவர காண்டம்' நூலில் உள்ளபடி.)**



அறிமுகம்:

# டாக்டர் N. சங்கர்லால்

## (1911 - 1971)

டாக்டர் சங்கர்லால் என்ற பெயரை அநேகமாக எல்லா ஊர் ஸெளராஷ்டிர மக்களும் கேட்டிருப்பார்கள். காரணம், இவர் ஸௌ. சமூக ஒற்றுமைக்காக, கலாசார முன்னேற்றத்திற்காக சமூகத் தலைவர்களை அழைத்துச் சென்று பிரயாணம் செய்தார்: மக்களைச் சந்தித்தார்; மக்களைச் சிந்திக்க வைத்தார் மதுரை நவபத்கானு கோர்ட்டுத் தெருவில் உள்ள இவருடைய 'ஜாபாலி கிளீனிக்' இல்லம் மிகவும் புகழ் பெற்றது. பல ஊர் சமூகப் பிரமுகர்களும் தொண்டர்களும் இவருடைய நட்புறவையும், விருந்து உபசாரத்தையும் அனுபவித்திருக்கின்றனர். ஒரு முறை இவரைச் சந்திப்பவர்களின் உள்ளத்தில் நிரந்தரமாக வாசம் செய்யும் வல்லமை படைத்தவர். தமது நாவன்மையால் பெருங்கூட்டத்தையும் கவர்ச்சிகரமாகச் சமாளிக்கும வல்லமை வாய்ந்தவர். தமிழிலும், ஸெளராஷ்டிர மொழியில் இவர் தலை சிறந்த நாவலர். சமூகத்தில் ஏற்படும் கோஷ்டித் தகராறுகளை எளிதில் சிக்கறுத்து சமாதானம் செய்து விடும் சாமர்த்தியம் இவருக்கு உண்டு. ஆளைக்கண்டவுடன் அளந்துவிடும் தனித்திறமை வாய்ந்த இவர் எல்லோரையும் நட்புறவு, பாசத்தால் பிணைத்துக் கொள்வார். ஸௌ. சமூகத்திலுள்ள கோத்திரங்கள், வீட்டுப்பெயர்கள் இவருக்கு

அத்துபடி. அவைகளை முறையாகப் பயன்படுத்தும் நுணுக்கத்தை மிக அருமையாகக் கையாள்வார். தமக்கு அறிமுகமில்லாதவர்களை யும் அவர்களுடைய கோத்திரம், குடும்பப்பெயர்களை விசாரித்து விட்டு உறவு முறையைக் கண்டுபிடித்து விடுவார்! பிறகு சொல்ல வேண்டுமா! வந்தவர் குடும்ப நண்பராகி விடுவார். அவருடைய குடும்ப க்ஷேமலாபங்களில் பங்கு கொள்வார். இத்தகைய தனிச் சிறப்பு வாய்ந்த டாக்டர் சங்கர்லால் ஸௌ. சமூகத்தின் பொதுச் சொத்து.

மதுரையில் ஜாபாலி கோத்திரத்தில் புகழ் பெற்ற 'எண்ணை மண்டி தொப்பென்' குடும்பத்தில் 23-10-1911-ல் தோன்றினர். தந்தையார் பெயர் திரு நாகசாமி அய்யர். இளமையில் குடும்ப பாரம் ஏற்ற டாக்டர் சங்கர்லால் பொது வாழ்க்கையிலும், தேசீயப் போராட்டங்களிலும் பங்கு கொண்டார்; தியாகி மான்யம் பெற்றுர். இவருடைய அச்சமின்மையும், அபிநயத்திறமையும், உரங்கொண்ட நாவன்மையும் தேசீய வாழ்வில் இவருக்குச் சிறப்பான இடத்தைப் பெற்றுக் கொடுத்தன. தடை செய்யப்பட்ட பாரதியார் பாடல்களைத் துணிந்து பாடினர். 'ராஷ்ட்ரபந்து' எல். கே. துளசிராம், காந்தீயத் தலைவர் திரு என். எம். ஆர். சுப்பராமன், மதுரை திரு. வைத்ய நாதய்யர், தலைவர் சத்தியமூர்த்தி, தியாகிகள் மட்டப்பாறை வெங்கட் ராமய்யர், எஸ். என். சோமயாஜுலு போன்றவர்களின் அபிமானத் துடன் தேசிய வாழ்வில் பணியாற்றினர். திரு கிருஷ்ணகுந்து, திரு. கி. ராமா போன்ற சமூக தியாக சீலர்களின் அன்பைப் பெற்றுர். தனி நபர் சத்தியாக்கிரகத்தில் சிறை சென்ற இவர் இறுதிவரைக்கும் தேசீயவாதியாக இருந்தார்.

உருவத் தோற்றத்தில் வாமனராகக் காட்சியளித்தாலும் ஆசாரக் குடுமியுடன் கூடிய கிராப், பஞ்ச கச்சம், ஜிப்பாவுடன் மிடுக் கான நடையில் இவரைக் கண்டவர்கள் மறக்க முடியாது. வேஷ்டி, ஜிப்பா, பாண்ட் எதுவாயினும் கதர் தான்! கோபி சந்தனம் பூசி கழுத்தினில் துளசி மாலையுடன் ஆசார சீலராக சமய நிகழ்ச்சிகளுக்குச் செல்வார். மதுரையில் Y. M. I. A. சங்கத்தை நிறுவி, நூலகத்தை அமைத்து, மக்களிடையே தேசீய உணர்வையும், காந்தீய நிர்மாணத்

திட்டங்களையும் நிறைவேற்றப் பாடுபட்டார். தேசீய சேவையோடு ஸௌ. சமூகத்திற்கும் தொண்டாற்றி வந்தார். 'ஸௌ. விப்ரபந்து' கு. வெ. பத்மனபய்யருடன் சேர்ந்து கொண்டு ஸௌ. இலக்கிய, கலாசாரப் பணியாற்றினர். ஸௌ. ஸுகுஞேதயா சபாவின் ஆதர வில் நடைபெற்ற ஸௌ. மொழி நாடகங்களில் வேடமேற்று நடித் தார்; பாடினர். திரு. கு. வெ. ப. வின் இலக்கியப் பிரசார, வெளியீட்டுப்பணியில் டாக்டர் சங்கர்லாலின் பங்கு மகத்தானது.

ஸௌ. சமூக மக்களுக்குக் கலாசார அந்தஸ்து அளித்ததுடன் அவர்களைத் தமது அபிமான சிஷ்யர்களாக ஏற்றுக்கொண்டு ஆதர வளித்தது மைசூர் மாநிலம், மஜ்ஜிகே ஹள்ளி ஸ்ரீமந் மாதவ தீர்த்த சமஸ்தான மடம். மதுரையில் ஸௌ. சமூக மக்கள் மத்வாச்சாரியார் விஜயம் செய்யும் பொழுது வரவேற்று உபசரித்து, குருகாணிக்கை செலுத்துவது வழக்கம். டாக்டர் சங்கர்லால் மாத்வமதப் பிரசாரத் தில் மிகவும் ஈடுபட்டவர். மதுரை பிரம்ம வித்யாஸ்ரம சபையில் நிர்வாகியாகவும் இருந்தார். இவருடைய குருபக்தி சிரத்தையைப் பாராட்டி இந்த மடம் இவருக்குக் 'குருதுரீண' பட்டத்தை அளித்துச் சிறப்பித்தது. தீவிர ஆஸ்தீகரான இவர் சமூக மகான்களான ஸ்ரீமந்நடன கோபால நாயகி சுவாமிகள், ஸ்ரீ வேங்கட சூரி, ஸௌராஷ்டிரப் பெரும் பேராசிரியர் தொப்பே மு. ராமராய், (தொப்பே) ஸ்ரீ செல்வார்ய ஸ்வாமிகள் ஆகியோருடைய வரலாறு களைப் பரப்பியும், பாடல்களைப் பாடியும் மக்களிடையே பிரசாரம் செய்து வந்தார். கூட்டத் தொடக்கத்தில் ஸௌ. மொழி சுலோ_ கத்தை உச்சரிப்புச் சுத்தமாகப் பாடுவது அவருக்குரிய தனிப்பாணி. இவர் ஸௌ. இலக்கிய அபிமானி, விமர்சகர். யாராவது ஸௌ, சமூகத்தையோ, மொழியையோ குறைவுபடப் பேசியதைக் கேள்விப் பட்டால் சிங்கமெனச் சீறி எழுவார்; அவர் மன்னிப்புக் கோரும் வரை ஓயமாட்டார்!

இவருடைய சமூக சேவையில் மருத்துவப் பணிக்கும் இடம் உண்டு. நாட்டு மருத்துவத்தில் தேர்ச்சி பெற்று R. P. I. M. பதிவு பெற்ற மருத்துவரானர். தமது கோத்திர ரிஷியின் பெயரால் 'ஜாபாலி கிளினிக்' என்று தமது மருத்துவமனைக்குப் பெயரிட்டார்.

ஒரு முறை இவருடைய குடும்ப நண்பருடைய புதல்வர் நேபாளத்திற்கு B. A. தேர்வு எழுதச் செல்வதாகக் கூறி இவரிடம் விடைபெற வந்தார். உடனே அவருக்கு மருத்துவ ஆலோசனையைக் கூறியதோடு கைவசம் தயாராக வைத்துக் கொள்ளும்படி மருந்துகள் கொடுத்து அனுப்பினர். தேர்வு எழுத முடியாத நிலையில் அவதிப்பட்ட அவருக்கு டாக்டரின் மருந்துப் பொட்டலங்களும் ஆலோசனைகளும் நினைவுக்கு வந்தன. அதிசயமாகப் பலன் கிடைத்தது. தேர்வு எழுதி நலமாக மதுரைக்கு வந்தார். 'தாயினும் சாலப் பரிந்து' செய்த உதவிக்கு நன்றி நவின்ருர். அதே நண்பர் காட்டு இலாகா ரேஞ்ஜர்ஸ் படிப்பில் சேர விரும்பினர். அதற்குப் பொறுப்பு வாய்ந்த பெரிய மனிதர்களின் ஜாமீன் கையெழுத்துத் தேவைப்பட்டது. இதைத் தற்செயலாக அறிந்தவுடன் டாக்டர் அவரிடம் உரிமையுடன் கோபித்துக் கொண்டு 'நான் ஒருவன் இருப்பதை மறந்து விட்டாயே' என்று கூறியபடி ஜாமீன் கையெழுத்து இட்டு ஆசீர்வாதம் செய்தார் இவருடைய ஆசி பலித்தது. இத்தகைய பல நிகழ்ச்சிகள் டாக்டரின் பண்பாட்டையும் சிறப்பையும் எடுத்துக் காட்டும். இவருடைய பரிந்துரையினல் பலர் நல்ல வேலைகளில் அமர்ந்து முன்னேறியுள்ளனர்.

எல்லா ஊர் ஸௌ. மக்களையும் இணைக்கும் பலம் வாய்ந்த ஸ்தாபனமாக ஸௌ. பிராமண மத்ய சபை விளங்கியது. தொடக்கத்திலிருந்து இறுதி மூச்சுவரை அதன் துடிப்பு மிகுந்த செயலாளராக இருந்து வந்தார். சமூகத் தலைவர்களான ராவ்பகதூர் கே. எம். எஸ் லெட்சுமணய்யர், (பாதே) P. S. A. கிருஷ்ணய்யர் ஆகியவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஸௌ. மகாநாடுகளில் பங்கெடுத்துக் கொண்டார். தமது 50-வது வயதில் சகதர்மிணியை இழந்தார். 26-12-1971ல் இவர் காலமான பொழுது ஸௌ. சமூகத்தின் சிறந்த தொண்டரை இழந்த உணர்வு மக்களுக்கு ஏற்பட்டது. தமது இறுதி காலத்தில் மைசூர் மஜ்ஜிகேஹள்ளி மாத்வ மடத்திற்குச் சென்று குருமகானின் ஆசி பெற்ருர். தம்முடைய பெயரை 'ஸங்கர்லால் ஸர்மா' என்று பிரகடனப்படுத்திக் கொண்டார்.

இவருக்கு 4 பெண் மக்களும், 2 புதல்வர்களும் உள்ளனர்.

# நன்றி

கீழ்காணும் பெருமக்கள் கோத்திர, குடும்பப் பெயர்களைச் சேகரிப்பதில் நூலாசிரியருக்கு மிகவும் உதவியுள்ளனர்.

மதுரை : 'பண்டித ரத்னம்' திரு. P. S. கோவிந்தய்யங்கார்
திரு புரோகிதம் ராமச்சந்திரியா வெங்கட்ராமய்யங்கார்

திண்டுக்கல் : நாகல்நகர் திரு. கோபுளா கி. ராமலிங்க பாகவதர்

பரமக்குடி : திருவாளர்கள் பேராசிரியர் (தாசு) D. K. சுப்பிர மணியன் (மதுரைக்கல்லூரி), Er. (குண்டுமணி) K. S. ராமமூர்த்தி, D. M. E. (கோவை)

பெரியகுளம் : ஸௌ. சபையின் சார்பாக செயலாளர்
Dr M கிருஷ்ணமூர்த்தி B. V. Sc

தஞ்சை : திருவாளர்கள் புரோகிதம் R குருமூர்த்தி (11–வது தலைமுறை தெலுங்குப் புரோகிதர், மானம்புச்சாவடி)
'கலைமாமணி' (லம்பங்கி) S. G. ராமமூர்த்தி பாகவதர்
கவிஞர் (குண்டே) K. H. ராஜாராம்
திரு (முசுவாதி) M. R. பாண்டுரெங்கன்

திருச்சி : திருவாளர்கள் புரோகிதம் ஜாதா கிருஷ்ணமாச்சாரியும், அவருடைய புதல்வர் பாஸ்கரனும்
அட்வகேட் M. K. வெங்கடாச்சாரி

கும்பகோணம்: திருவாளர்கள் Er. M. N. ராஜாராம் (முன்னாள் ஸௌ. மத்திய சபைத்தலைவர்), P. C. பாலகிருஷ்ணன்
துவாங்குறிச்சி குப்புசாமி (அஞ்சல் துறை)

உறையூர் : ஸௌ சபையின் சார்பாக செயலாளர்
திரு. அறந்தாங்கி தி. பார்த்தசாரதி

அய்யம்பேட்டை: திருவாளர்கள் A. R. சொன்ராஜ், A. R. வீரசிவாஜி

அம்மையப்பன்: திரு கட்டியம் S பலராமன்

சேலம் : திரு. பதிங்கா R. ராதாகிருஷ்ணன்

நாமக்கல் : ஸௌ. விப்ர சபாவின் சார்பாக செயலாளர்
திரு. K. சௌந்தரராஜன்

வீரவநல்லூர்: திரு. வாழை சீ ராதாகிருஷ்ணன்

திருவப்பூர் (புதுக்கோட்டை-3) : ஸௌ சபையின் சார்பாக செயலாளர் திரு. D. மன்னன்

ஆரணி : பேராசிரியர் திரு O. P. வித்யாகர் (கோவை P. S. G. டெக் கல்லூரி)

பெங்களூர் : திரு (ஒபுளா) O. S. சுப்பிரமணியன் (மதுரை)

'டாக்டர் N. சங்கர்லால்' கட்டுரையை எழுதுவதற்கு கீழ்காணும் பெருமக்கள் தந்த குறிப்புகள் பெரிதும் உதவின.

1. (குடுவா) K V. கிருஷ்ணமூர்த்தி, L. T. M. மதுரை
2. (கெண்டே) K. N. சீனிவாசாச்சாரி, மதுரை
3. போராசிரியர் திரு. S பாலகதிரேசன் (State Forest Service College, Coimbatore.)

## நன்றியும், பாராட்டும்.

இந்தக் கலாசாரப் பெட்டகம் உருப்பெற்று உலாவருவதற்குக் கீழ்காணும் பெருமக்கள் பேருதவி புரிந்துள்ளனர்.

திருவாளர்கள் : (சித்து) C. K. நரசிம்மாச்சாரி, மதுரை
(முஸுவாதி) Er M. K. சாந்தமூர்த்தி, மதுரை
(குடுவா) K. V. கிருஷ்ணமூர்த்தி & திருமதி பிரேமா தம்பதிகள்
(புளியடி) P. A. B. K. அழகர்சாமி, மதுரை
(குடுவா) K. K. சுரேந்திரநாத் & திருமதி காஞ்சனா தம்பதிகள் (M/s வாருணி கெமிக்கல்ஸ் லிமிடெட், மதுரை)
(ஓபுளா) O. V. நடேசன், சென்னை.
(ஸோலை) S. R. அமர்நாத் (மதுரை ஸோலை ஸ்ரீ முருகன் தர்ம டிரஸ்ட் சார்பாக)
(ஜூட்டு) J. R. குப்புசாமி சகோதரர்கள் (ஸ்ரீவாமன ஜெயந்தி டிரஸ்ட் சார்பாக)

ஸௌராஷ்டிர ஜோதி, ஸௌராஷ்டிர மணி, ஸௌராஷ்டிர டைம், பூஜாமணி, ஸுரித், பூஜாதீபம் ஆகிய பத்திரிக்கையாசிரியர்கள் இந்த நூல் தொடர்பான செய்திகளை வெளியிட்டு ஒத்துழைப்புத் தந்துள்ளனர்.

## அறிவிப்பு

ஒவ்வொரு கோத்திரத்திலும் புகழ்பெற்ற மகான்கள், சமூக சேவைக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்கள், நூலாசிரியர்கள், கலைஞர்கள் (சங்கீதம், ஓவியம் முதலியன), கவிஞர்கள், அரசியல் பிரமுகர்கள் ஏராளமாக இருந்திருக்கின்றனர்; இன்றளவும் சிறந்து விளங்குகின்றனர். இவர்களைப்பற்றி கோத்திரவாரியாகவும், குடும்பப் பெயர் வாரியாகவும் ஒரு தனிநூல் திரு கே. ஆர். சேதுராமன் அவர்களால் உருவாக்கப்பட்டுள்ளது. வாசகர்களும் தங்களுக்குத் தெரிந்த கீழ்காணும் விவரங்களைத் தெளிவாக எழுதி அனுப்பி வைக்கலாம். பெயர், ஊர் (பிறந்த/வசித்த), குடும்பப் பெயர் (பட்டப் பெயர்) (கே4ருநாவ் அடி3நாவ் ஸெரொ), சாதனை / எழுதியுள்ள நூல் போன்ற விவரங்கள.

ஒவ்வொரு குடும்பக்கூட்டத்தவர்களும் (கே4ருநாவு தெ3யதி3ன்) தங்களுடைய கூட்டுச் சாதனைகளையும் (விழா, தரும கட்டளைப் பணிகள், கோயில், பொது மண்டபம் நிறுவுதல் முதலியன) எழுதி அனுப்பலாம். இந்நூல் விரைவில் வெளிவருவதற்கு ஸௌ. சமூக மக்களின் நல்லாதரவு எதிர்நோக்கப்படுகிறது.

-வெளியீட்டாளர்

# ABOUT THE AUTHOR AND THE BOOK

Some months back I got an opportunity to go through the book, 'Sourashtras in Tamil Nadu' written by Thiru K. R. SETHURAMAN. I had some vague ideas and estimation about the origin, movement and settlement of our Sourashtra Community and also about the period during which the Community migrated and settled in Tamil Nadu. The irony was that even these informations, I obtained from the book written by Mr. Thurston, who was not a Sourashtrian. But the book by Thiru. K. R. SETHURAMAN gave such a lucid account of our Community; I was immensely pleased to know our history. Now I am more informed to explain my curious friends who want to know about our Community. Thiru K. R. SETHURAMAN has really done a commendable work.

Again to surprise me and my friends Thiru K. R. Sethuraman has brought out a dictionary of family names and Gothras of people of our Community, The information contained in this book will definitely give a new identity to our people who are so far rather ignorant of the importance of Gothras especially in arranging marriages.

The information contained in this book will also be very useful to the students of Anthropology and Sociology.

I feel that every Sourashtrian should own these books written by Thiru K. R. SETHURAMAN.

I really appreciate the tenacity of Thiru K. R Sethuraman who has devoted his time and energy in writing these books, solely as an obligation to the Community.

I also wish these books will bring together all factions of our Community for the common cause of unity and prosperity for the Community

With compliments,

**(Sd.) Thiru. T. K. SRINIVASAN,** I. F S

Deputy Conservator of Forests,

President.

L. K. T. Sourashtra Udyogin Sangam,

Coimbatore.

In the modern emphasis on sheer materialism and competitive existence, the Culture of the Sourashtra community continues its survival. The Community has Divine Grace and has been blessed with Scholars, Philosophers and Saints who, according to the needs, have renderd rich contributions.

"DICTIONARY OF GOTHRAS AND FAMILY-NAMES" is a unique one bringing out the essentialities of the basic needs for the fruitfulness of life and betterment of family's growth in a healthy Society. The underlying principles in Gothra-pravaram and its leading essentials have been vividly brought out. The existence of Gothra in vogue in amongst Sourashtra Community people and the characteristic details are really exemplary. The explanatory traditional habituals of the Community have a rich background.

At this juncture I remember and repeat the words and sayings of Great men :

> "...When HE plans to get a thing done
> for the Community, HE chooses a worker
> and inspires him to serve HIS plan.
> So-long-as the chosen worker is honest,
> sincere and self-lessly dedicated
> without any break, the grace of HIM
> floods through the Sevak..."

Thiru K. R. SETHURAMAN, the author of the Dictionary has taken the place of 'Sevak' and has rendered self–less works in unfolding the essential requirements of to-day and in making unknown things now known. His other publications are really worth to keep as 'treasures' which occupy a distinct and an authentic place. His stupendous works and services are really applauded and recognised. I join with well-wishers in sincerely praying for his continuance of works to bring many more essential publications of to-day's needs, for which may LORD SRI VENKATESHWARA shower HIS kind Blessings to him and to his family members.

Anban

**(Sd.) Thiru. K. V. Krishnamoorthy**
Asst. Director,
Regional Office of the Textile Commissioner,
Govt. of India,
Coimbatore.
Ex-President of BOMBAY SOURASHTRA ASSOCIATION, BOMBAY



# திரு. கே. ஆர். சேதுராமன் அவர்களின் மற்ற நூல்கள்

## 1. ஸ்ரீ தியாகராஜ வேங்கடரமண சரித்திரம்

இசையுலகில் புகழ் பெற்ற ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள், அவருடைய பிரதம சிஷ்யர் வாலாஜாப்பேட்டை ஸ்ரீ வேங்கடரமண பாகவத ஸ்வாமிகள் - ஆகிய இரண்டு மகான்களின் வாழ்க்கை வரலாறு. டாக்டர் C. P. ராமசாமி அய்யர், டாக்டர் A. L. முதலியார், நீதிபதி M. அனந்த நாராயணன், I. C. S. முதலிய அறிஞர்களின் பாராட்டுதல்களைப் பெற்றது.

## 2. தமிழ்நாட்டில் ஸௌராஷ்டிரர் : முழு வரலாறு

தமிழ்நாட்டில் வாழும் ஸௌராஷ்டிர சமூக மக்களின் மொழி, பண்பாடு, வரலாறு, சமூகத்தவரின் சாதனைகள் முதலியவைகளை விவரிக்கும் ஆராய்ச்சி நூல். வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் N. சுப்பிரமணியனின் அணிந்துரையுடன் கூடியது. ஆராய்ச்சியாளர்களின் பாராட்டுதல்களைப் பெற்றது! ஒவ்வொரு ஸௌராஷ்டிரரும் அவசியம் படித்தறிந்து பாதுகாக்க வேண்டிய தகவற் சுரங்கம்.

## 3. நமனை வென்ற நாயகி

'மதுரையின் ஆண்டாள்' மகான் ஸ்ரீ நடனகோபால நாயகி ஸ்வாமிகளின் வாழ்க்கையை விவரிக்கும் நூல். நடமாடும் 'தெய்வீகப் பல்கலைக் கழகம்' திருமுருக கிருபானந்த வாரியாரின் முன்னுரையுடன் கூடியது. ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் இந்நூலின் புத்தகச் சுருக்கத்தை அருளியிருக்கிறார். 'ஸௌராஷ்டிர ஜகத்குரு'வின் தமிழிசைப் பாடல்களுடன் கூடியது.

பாலமுரளி அச்சகம், கோவை-1.